ஸ்ரீமத் கம்ப ராமாயண

கதா காலட்சேபப்

# பெருவேள்வி மலர்

(மகாயக்ஞம்)



—: வெளியீடு :—

ஸ்ரீ ராம கதா நிலயம்

3|19, கீழ 2ம் வீதி, புதுக்கோட்டை

தந்தி: "ராமகதா" புதுக்கோட்டை-1



# சமர்ப்பணம்.



சென்ற 27 வருட காலமாக எனது தமிழ், தெய்வீகப் பணிகள் நன்கு நிறைவேற ஏற்பாடுகள் செய்த அன்பர் கட்கும், எனது புத்தகங்கட்கு முகவுரை அளித்தும் பாராட்டி யும், பண உதவி செய்தும் ஊக்குவித்த பெரியோர்களுக்கும் வள்ளல்களுக்கும், எனக்கு பொன்னுடை, பொற்பதக்கம் முதலிய பரிசளித்தும் எனது சொற்பொழிவுகளைக் கேட்டும் ஊக்குவித்தும் ஆதரித்த பொது மக்களுக்கும், எனது புத்தகங் களை அச்சிட்டு அழகாக மக்களுக்குச் சமர்ப்பிக்கும்படி செய்த பல அச்சியந்திரசாலை அன்பர்களுக்கும், எனது பிரசங்கங்கள் பற்றிய விவரங்களை தங்களது பத்திரிகைகளில் பிரசுரித்த பத்திராதிபர் பெருமக்களுக்கும், எனது கடிதப் போக்கு வரத் துக்கள் சரியாக நடைபெற உதவிய எல்லா ஊர்களிலுமுள்ள அஞ்சல் துறையினருக்கும், எனது பிரயாணங்கள் சுகமாக அமைய உதவிபுரிந்த பஸ், விமான, ரயில் நிலையத்தினருக்கும், என் சொற்பொழிவுகளில் தலைமை வகித்த பெரியோர் களுக்கும் பொதுமக்களுக்கும், யாவற்றிற்கும் காரணமான என் குருநாதர் திரு. N. R. கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கட்கும் ஸ்ரீ கோதண்டபாணி ஸ்ரீ தண்டபாணி ஆகிய தெய்வங்களுக்கும் என் நன்றி கலந்த வணக்கத்துடன் இப் புத்தகத்தைச் சமர்ப்பிக்கின்றேன்.

ஸ்ரீராம கதா ரத்ன V. தியாகராஜன்,
10-9-67

உ
ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீமத் கம்ப ராமாயண கதா காலட்சேபப் பெருவேள்வி மலர்.

## (மகாயக்ஞம்)

## 1. அறிமுகம்.

பேரன்புடையீர்! நமஸ்காரம். செவிக்குத் தேனென இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகனும் கம்பர் பெருமானின் அடிமையான எனக்கு 13-6-1967 எனது இரண்டாவது பிரதிக்கினை நிறைவேறிய பொன்னுள். கல்கத்தா பாரதியார் தமிழ்ச் சங்கத்தில் அடியேனது 108-வது கம்ப ராமாயண பட்டாபிஷேகம் 24-6-1956 அன்று நிறைவேறியது. அடியேனது 105-வது கம்ப ராமாயணப் பிரசங்கம் ரிஷிகேசம் ஸ்ரீ சுவாமி சிவானந்த மகராஜ் அவர்களின் திருமுன்னிலையில் கங்கை நதியின் கரையில் நடைபெற்று 2-5-1956 அன்று முடிந்தபோது இரண்டாவது முறையாக 108 பட்டாபிஷேகங்கள் செய்வதாக அவர்கள் திருமுன்னர் பிரதிக்கினை எடுத்துக் கொண்டேன். இவ்வாறு இராமாயணச் சொற்பொழிவுகளை நூற்றுக்கணக்காகச் செய்ய வேணுமென்ற எண்ணம் எவ்வாறு ஏற்பட்டது, அதன் காரணமாக என்க்கு ஏற்பட்ட சங்கடங்கள், தடங்கல்கள் எவ்வளவு என்பதையும் எனது சில மறக்க முடியாத அனுபவங்களையும் "எதிர் நீச்சல்" என்ற தலைப்பில் பிறிதோறிடத்தில் எழுதியுள்ளேன். நமது 216 பட்டாபிஷேகங்கள் எங்கெங்கே நடைபெற்றன, யார் யார் எந்த சந்தர்ப்பங்களில் பட்டமளித்தும், பொன்னுடை போர்த்தியும் ஆசிகூறி கௌரவித்தனர் என்ற விவரங்களும் இம்மலரில் கொடுக்கப் பெற்றுள்ளன. அவ்வளவு பெருமக்களுக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு எனது மூன்றுவது பிரதிக்கினையை நிறைவேற்றி 1974-க்குள் 324-வது பட்டாபிஷேகத்தை நிறைவேற்ற உதவுமாறு வேண்டிக் கொள்கிறேன்.

c) மகாவித்வான் ஸ்ரீ மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய பல நூல்களையும் அனைவரும் படித்து இன்புறுவதற்குத் தூண்டுகோலாக அமையுமாறு அவர்களது சில பாடல்களை மேற்கோள் காட்டி சுமார் 100 பக்கங்களில் ஒரு புத்தகம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

d) தமிழ் நாட்டில் ஐயனுரப்பன் என்று விளங்கும் ஸ்ரீ தர்ம சாஸ்தாவை கேரள தேச அன்பர்கள் அதிகமாகக் கொண்டாடுவதால் அது கேரள தேசத்தினருககு மாத்திரமே தெய்வம் என்று தமிழ் நாட்டில் சிலர் எண்ணியுள்ளனர். ஐயப்பனும் சிவகுமாரன், செந்தமிழ்ச் செல்வனும் முருகப்பெருமானின் சகோதரன், நமக்கெல்லாம் கண் கண்ட தெயவம் ஏன்று விளக்கி சுமார் 40 பக்கங்களில் "கலியுகவரதன் ஐயப்பன்" ஏன்ற தலைப்பில் கந்தபுராணம், கம்பராமாயணம் முதலிய நூல்களிலிருந்து மேற்கோள் காட்டி ஒரு புத்தகம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

இந்த நான்கு புத்தகங்களையும் எழுதித் தமிழ் நாட்டினருக்கு அளித்து 324, ஸ்ரீ ராம பட்டாபிஷேகம் 198 அனுபூதி, 192 திருவிளையாடற் புராணப் பிரசங்களையும் முடித்து விட்டேன் என்றுல் வாழ்க்கையில் எனது தெய்வீக சேவை முடிந்ததாகத் திருப்தி யடைவேன். எனது பிரசங்கங்கள் மூலம் யாவரும் உதவி நிதி அடைய வேண்டுமென்பது எனது ஆவல்.

அன்பர்கள் எனது சேவையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறேன்.

## 3. பிரசங்கங்கள் ஏற்பாடு செய்வதற்கான விவ்ரங்கள்.

1. இராமாயணம் 16 முதல் 27 நாட்களிலும், திருவிளையாடற் புராணம் 12 நாட்களிலும் கந்தரனுபூதி 2 நாட்களிலும் நிகழ்த்தலாம் ஒரு நாள் நடத்தக்கூடிய சொற்பொழிவுகளுக்கு அன்பர்கள் முன்கூட்டியே எழுதினுல் எந்தப் பொருளைப்பற்றி வேண்டுமானுலும் சொற்பொழிவு செய்ய இயலும்.

2. அடியேன் ஆர்மோனியக்காரருடன் வருபவனுதலால் இருவருக்கு வசதி செய்து தர வேண்டுகிறேன்.

3. சுவரொட்டி, பத்திரிகைள் தேவையானுல் நாங்களே தயார் செய்து கொடுத்துப் பினனுல் பணம் வாங்கிக் கொள்ளுகிறேம்,

4. எங்கு சென்ருலும் எனது சொற்பொழிவுகளுக்கு நல்ல கூட்டமும் ஆதரவும் கிடைப்பதால் அன்பர்கள் வசூல் பற்றிய கவலேயே யில்லாமல் இறைவனை நம்பி எமது கதையை ஏற்பாடு செய்யலாம். வசூலாகும் துகையில் சிலவு போக பாக்கியை ஏற்றுக் கொள்ள சித்தமாயிருக்கிறேன்.

5. சொற்பொழிவு நிகழ்த்தும் இடங்களில் அன்பர்கள் சப்தம் சிறிதுமில்லாமல் பார்த்துக் கொள்ளுதல் வேணும்.

6. சன்மானமாகப் பணம் மட்டுமே அளிக்க வேண்டுகிறேன். அன்பர்களிடம் பழைய தமிழ்ப் புத்தகங்கள் செய்யுள் நடையிலிருந்தால் அளிக்கலாம்.

7. கூடியமட்டில் உதவி நிதிக் கச்சேரிகளையே வரவேற்கிறேன்.

8. அன்பர்கள் தங்களது உற்ருர் உறவினர்கட்கு அடியேனது திருப்பணிபற்றி எழுதி. அவர்களின் விலாசங்களையும் எனக்கு எழுதியனுப்பினுல், நானும் நேரிலோ கடித மூலமோ துடர்பு கொள்வேன்.

தயவு செய்து பதில் எழுதவும் நமஸ்காரம்,

அன்புடன்,

ஸ்ரீ ராமகதாரத்ன V. தியாகராஜன்

## 4. அடியேன் ஸ்ரீராம காதை நிகழ்த்திய இடங்கள்.

(தேதி விபரங்கள் நேரில் அறியவும்)

முதலாவது பிரதிக்ஞை.

1 மதுரை, 2 அருவங்காடு, 3 மதுரை, 4 கோவை, 5 கோவை

1948: 6 விருதுநகர், 7 to 9 மதுரை.

1949: 10 திருச்சி, 11 திருச்சி, 12 அவிஞசி, 13 மேட்டுப்பாளையம், 14 ஊட்டி, 15 மோயார், 16 மசினகுடி, 17 அருவங்காடு.

1950: 18 அவிஞசி, 19 & 20 திருப்பூர், 21 பெங்களூர், 22 கோபி, 23 கூகலூர், 24 அவிஞசி, 25 சத்யமங்கலம் 26 to 28 கோயம்புத்தூர், 29 மௌன்ட்பிளஸன்ட், 30 வெல்லிங்டன் 31 கூனூர்.

1951: 32 ஊட்டி, 33 மோயார், 34 ஈரோடு, 35 to 39 திருச்சி, 40 மகாதானபுரம், 41 & 42 புதுக்கோட்டை, 43 திருக்கோகர்ணர், 44 புதுக்கோட்டை.

1952: 45 புதுக்கோட்டை, 46 அரிமளம், 47 சேலம், 48 திருக்கோகர்ணம், 49 திருச்சி, 50 திருமயம், 51 & 52 ஆலங்குடி 53 வடகாடு, 54 காஞடுகாத்தான், 55 ஹரூர், 56 நாகப்பட்டினம், 57 புதுக்கோட்டை.

1953: 58 கீரனூர், 59 & 60 காரைக்குடி, 61 அதிராம் பட்னம், 62 புதுக்கோட்டை, 63 கோழிக்கோடு, 64 கோயம் புத்தூர், 65 மேட்டுப்பாளையம், 66 பாபநாசம், 67 ரங்கநாதபுரம் 68 அய்யம்பேட்டை, 69 & 70 திருக்காட்டுப்பள்ளி, 71 மெலட்டூர், 72 திருக்காட்டுப்பள்ளி, 73 புதுச்சத்திரம், 74 மேட்டூர் அணை, 75 மேவானி.

1954: 76 கண்டனூர், 77 கடலூர், 78 க்ரோம்பேட்டை 79 C. N. பாளையம், 80 மேல்குமாரமங்கலம், 81 அரியலூர், 82 புதுவயல், 83 ஆத்தூர் (Madurai), 84 திண்டுக்கல், 85 விருதுநகர், 86 ஸ்ரீரங்கம்.

1955: 87 தூத்துக்குடி. 88 மாம்பலம், 89 சின்னசேலம், 90 to 92 ஜம்ஷட்பூர், 93 திருவையாறு. 94 கும்பகோணம், 95 தேவகோட்டை, 96 ஆத்தூர்-சேலம், 97 திருவிடை-மருதூர், 98 கும்பகோணம், 99 எர்ணாகுளம்.

1956: 100 பூந்தமல்லி 101 சிதம்பரம், 102 சிந்தாதிரிப் பேட்டை, 103 மாம்பலம். 104 புதுடில்லி, 105 ரிஷிகேசம், 106 ஜமாலபூர், 107 டெல்கோ, 108 கல்கத்தா.

## இரண்டாவது பிரதிக்ஞை

1956: 109 ஹிராகூட், 110 கரக்பூர், 111 மன்னார்குடி, 112 வடுவூர், 113 எட்டையபுரம், 114 சேலம், 115 ராசிபுரம், 116 சிவகாசி.

1957: 117 மே. மாம்பலம், 118 விசாகப்பட்டினம், 119 பங்களூர், 120 ஊரிகாம், 121 தண்டையார்பேட்டை, 122 மதுக்கூர், 123 ஸ்ரீராமகதா நிலையம், 124 தேவகோட்டை, 125 ஊரிகாம், 126 பாளையங்கோட்டை.

1958, 127 திருநெல்வேலி, 128 இராமநாதபுரம், 129 கர்கி, 130 திருவனந்தபுரம், 131 தஞ்சாவூர், 132 புதுக்கோட்டை, 133 விழுப்புரம், 134 புதுப்பட்டி, 135 கூனூர், 136 & 137 வேலூர், 138 திருப்பத்தூர். (N.A.Dt.)

1959: 139 உடுமலைப்பேட்டை, 140 எமரால்ட், 141 அரக்கோணம், 142 பங்களூர், 143 சென்னை, 144 தாம்பரம், 145 பங்களூர், 146 கும்பகோணம், 147 மேட்டுப்பாளையம், 148 புதுக்கோட்டை.

1960: 149 உடுமலைப்பேட்டை, 150 கரூர், 151 நெய்வேலி, 152 மாயனூர், 153 கொழிஞ்சிவாடி, 154 புதுக்கோட்டை,155 திருப்பூர், 156 தாராபுரம், 157 கோயம்புத்தூர், 158 பொள்ளாச்சி.

1961: 159 மே. மாம்பலம், 160 ரெட்டியாரூர், 161 ராமநாதபுரம், 162 திருப்பூர், 163 காட்டுபுத்தூர், 164 மதுரை, 165 திருச்சி, 166 துலுக்கப்பட்டி, 167 போபால், 168 ஜபல்பூர்.

1962: 169 கொப்பனுபட்டி, 170 மேலச்சிவபுரி, 171 கண்டவராயன்பட்டி, 172 நெய்வேலி, 173 தூத்துக்குடி, 174 சென்னை–28, 175 தி. நகர்.

1963: 176 சென்னை, 177 பம்பாய், 178 சென்னை, 179 பனையப்பட்டி,180 சிறுகமணி, 181 நங்கவரம், 182பொள்ளாச்சி 183 டாப்ஸ்லிப்.

1964: 184 திம்மாச்சிபுரம், 185 புளியம்பட்டி, 186 அத்திக்கடவு, 187 தூத்துக்குடி, 188 சென்னை, 189 மதுரை, 190 கோயம்புத்தூர்.

1965: 191 திருப்பத்தூர் (R.D.),192எர்ணாகுளம்,193உரத்தநாடு, 194 கொச்சி, 195 & 196 சென்னை, 197 ஊட்டி, 198 திருச்சி, 199 பெருங்குளம்.

1966· 200 திருச்சூர், 201 நாகர்கோயில், 202 நெய்வேலி, 203 ஈரோடு, 204 திருப்பூர், 205 மிதிலைப்பட்டி, 206லால்குடி 207 திருச்சி, 208 கோவை, 209 முசிரி, 210 புதுக்கோட்டை.

1967: 211 கோவை, 212 தொட்டியம், 213 நாமக்கல், 214 ரூர்கேலா, 215 ஈரோடு, 216 அரக்கோணம்.

மூன்றுவது பிரதிக்ஞை

1967: 217 துறையூர், 218 ஊட்டி.

---

தற்சமயம் நமது பிரசங்கம் நடைபெறுகிறது. ( முதல் வரை)

---

## 5. பட்டங்கள் பெற்ற விவரங்கள்:

1. ஸ்ரீ ராமகதா ரத்னம்: நமது 27 வது கம்பராமாயணச் சொற்பொழிவு 4-9-50 அன்று கோவை தெலுங்கு பிராமணாள் வீதியில் முடிவடைந்தபோது இந்திய வாலிபர் சங்கத்தின் சார்பாக கோவை நவ இந்தியா (அந்நாள்) ஆசிரியர் திரு. ராமஸ்வாமி அவர்களால் அளிக்கப்பட்டது.

2. கம்பர் கவி முழக்கம்: தஞ்சை ஜில்லா ரங்கநாதபுரத்தில் 19-8-53 முடிவடைந்த 67வது பட்டாபிஷேகத்தின் போது தமிழ் தாத்தா டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர் அவர்களின் சீடர் திரு. திராவிடக்கவிமணி முத்துஸ்வாமி அய்யர் M.A,L.T. அவர்களால் அளிக்கப்பட்டது.

3. கம்பன் வல்லான்: திருக்காட்டுப்பள்ளியில் நடைபெற்ற 70 வது பட்டாபிஷேகத்தின் போது 7-10-1953 அன்று பொது மக்கள் சார்பாக P. S. ஹைஸ்கூல் தலைமையாசிரியர் ஸ்ரீமான் S. R. பாலசுப்ரமணிய அய்யர் அவர்களால் அளிக்கப்பட்டது.

4. கம்பன் கவிசந்த மேகம்: மதுரை ஜில்லா ஆத்தூர் திவ்ய ஜீவன சங்கம், ஸ்ரீராம பஜன சங்கம் இவற்றின் ஆதரவில் நடைபெற்று 6-8-54 அன்று முடிவடைந்த 83வது பட்டாபிஷேகத்தின்போது திருவாளர் மதுரகவி ராதாகிருஷ்ணய்யர் அவர்களால் அளிக்கப்பட்டது.

5. கம்பன் கதிரொளி: விருதுநகர் காரைக்காலம்மையார் சங்கத்தின் சார்பில் நடைபெற்ற 85வது பட்டாபிஷேகத்தின்போது ஷ்ஷி சங்கத்தின் சார்பில் 14-11-54 அன்று அளிக்கப்பட்டது.

6. கம்பன் கவிச் செல்வன்: கும்பகோணம் ஸ்ரீ சங்கரமடத்தில் நடந்து 10-11-55 அன்று முடிவடைந்த 98 வது பட்டாபிஷேகத்தின்போது நகர மக்கள் சார்பில் அளிக்கப்பட்டது.

7. கம்பன் அபிநவ காளமேகம்: சிதம்பரம் திவ்ய ஜீவன சங்கத்தில் 101வது பட்டாபிஷேகம் நிறைவேறிய 19-2-56 அன்று அளிக்கப்பட்டது.

8. கம்ப ராமாயண ஜோதி: ரிஷிகேசத்தில் ஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்கள் முன்னிலையில் 16-4-56 to 2-5-56 வரை நடைபெற்ற 105வது பட்டாபிஷேக முடிவில் ஸ்ரீ யோக வேதாந்த ஆரண்ய சர்வகலாசாலை (The Yoga Vedanta Forest University

Rishikesh) சார்பில் ஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்களால் அளிக்க பட்டது.

9. முத்தமிழ் வித்தகர்: ராபர்ட்சன்பேட்டை (K G F) யில் நடந்து 21-11-57 அன்று முடிவடைந்த 126வது பட்டாபிஷேகத்தில் ஷெயூர் வித்வான் திரு ஆறுமுகனூர் அவர்களால் அளிக்கப்பெற்றது

10, கம்பக் கலைமணி: எனது சுந்தரகாண்டப் புத்தகத்தைப் படித்து மகிழ்ந்து ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் அளித்தது.

## 6, பொன்னுடை போர்த்தப்பட்ட விவரங்கள்

1. தேவகோட்டையில் அடியேனுடைய 124வது இராமாயணப் பிரசங்கமும் திருவிளையாடற்புராணப் பிரசங்கமும் சேர்ந்து நடைபெற்றன. 9-9-57 அன்று இரவு நடந்த மீனாட்சி கல்யாணத்தில் தேவகோட்டை ஸ்ரீ அ. கண. வீர. கண்ணப்பச் செட்டியாரவர்களால் போர்த்தப்பட்டது.

2. இராமநாதபுரத்தில் நடைபெற்ற 128 வது இராமாயண பட்டாபிஷேகத்தில் 25-3-58 அன்று இராமநாதபுரம் திவான் ஸ்ரீ பாலாஜி ராவ் அவர்களால் போர்த்தப்பட்டது.

3. உடுமலைப்பேட்டையில் நடைபெற்ற 129வது இராமாயண பட்டாபிஷேகத்தில் 4-3-59 அன்று பொதுமக்கள் சார்பில் ஸ்ரீ V. ஸ்ரீனிவாசன் அவர்களால் போர்த்தப்பட்டது.

4. விழுப்புரம் திவ்ய ஜீவன சங்கத்தில் நடைபெற்று 20-9-59 அன்று முடிவடைந்த திருவிளையாடற்புராணப் பிரசங்கத்தின் போது கனம் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களால் போர்த்தப் பட்டது.

5. கும்பகோணம் தியாகப்ரம்ம சபையின் ஆதரவில் நடை பெற்ற 146வது இராமபட்டாபிஷேகத்தின் முடிவில் 23-10-59 அன்று மந்திரி கனம் ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களால் போர்த்தப் பட்டது-

6. பொள்ளாச்சி தாலூகா ரெட்டியாரூரில் நடைபெற்ற 160வது பட்டாபிஷேக முடிவில் 6-2-1961 அன்று ஸ்ரீ திருமலைசாமி B. A., அவர்களால் போர்த்தப்பட்டது.

7. இராமநாதபுரத்தில் நடைபெற்ற 161 வது பட்டாபிஷேக முடிவில் 2-3-1961 அன்று இராமநாதபுரம் ஸ்ரீஷண்முகராஜேஸ்வரி சேதுபதி மகாராஜா அவர்களால் போர்த்தப்பட்டது.

8. உடுமலைத்தாலுகா தேவனூர் புதூரில் நடைபெற்ற திருவிளையாடற்புராணப் பிரசங்கத்தின் முடிவில் அரசமரத்துத்தோட்டம் ஸ்ரீ ஷண்முகவேல் கவுண்டர் அவர்கள் சார்பில் பொள்ளாச்சி M L.A ஸ்ரீ N. மகாலிங்கம் B. Sc., அவர்களால் 14-3-61 அன்று போர்த்தப்பட்டது.

9. திருச்சி ஜில்லா கொப்பனுபட்டியில் ஸ்ரீ மு. ப. நாராயணன் செட்டியார் அவர்கள் இல்லத்தில் நடைபெற்ற 169-வது பட்டாபிஷேக முடிவில் 15-1-62 அன்று ஸ்ரீ மு. ப. நாராயணன் செட்டியார் (Chairman, India Leather Corporation Madras.) அவர்களால் போர்த்தப்பட்டது.

10. சென்னை ராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீமான் வைத்ய சுப்ரமணிய அய்யர் அவர்களின் ஆதரவில் நடைபெற்று முடிவடைந்த 174வது பட்டாபிஷேகத்தின்போது 14-8-62 அன்று கனம் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் ஸ்ரீ செட்டிநாட்டு அரசர் ஸ்ரீ ராஜா சர். முத்தையா செட்டியார் அவர்களால் போர்த்தப்பெற்றது.

11. பொள்ளாச்சி மாரியம்மன் கோயிலில் நடைபெற்று 19-10-63 அன்று முடிவடைந்த 182வது பட்டாபிஷேகத்தில் முன்னாள் அமைச்சர் திரு T. S. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையில், ஸ்ரீவயலூர் சுவாமிகள், மத்திய அரசாங்க மந்திரி ஸ்ரீமதி லட்சுமிமேனன் அவர்கள் முன்னிலையில் பொள்ளாச்சி ஸ்ரீ N. மகாலிங்கம் M.L.A. அவர்களால் போர்த்தப்பட்டது-

12. கோவை R. S. புரம் திவான் பகதூர் ரோட் ரத்ன விநாயகர் கோயிலில் நடைபெற்ற 190வது இராமாயணச் சொற்பொழிவு நடைபெற்றபின் 10-12-64 அன்று திரு M. S. ஜகன்னாதய்யங்கார் அவர்களால் போர்த்தப்பட்டது.

13. சென்னை-38 I. C. F. கமலவிநாயகர் சத் சங்கத்தில் 12-8-65 அன்று நடைபெற்ற ஸ்ரீ மீனாட்சி கல்யாணம் வெளியீட்டு விழாவில் செட்டி நாட்டரசர் அவர்களின் காரியதரிசி ஸ்ரீ V. வைத்ய சுப்ரமணிய அய்யர் அவர்களால் போர்த்தப்பெற்றது.

14. 23-3-66 அன்று இரவு நாகர்கோவிலில் நடைபெற்ற 201 வது பட்டாபிஷேக விழாவில் பொதுமக்கள் சார்பில் ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களால் பொன்னாடை போர்த்தப்பட்டது.

15. 14-10-66 வெள்ளியன்று இரவு கோவை R. S. புரம் குருகுக கான சபையாரால் 208வது ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்தின் முடிவில் ஸ்ரீ M. S. ஜகந்நாதய்யங்கார் அவர்களைக் கொண்டு போர்த்தப்பட்டது.

## 7. தங்க மெடல்கள் பெற்ற விபரங்கள்.

1. திருச்சி பாலக்கரையில் 8-8-51 முடிந்த 37வது பட்டாபிஷேகத்தில் ஸ்ரீ V. K. A. ரங்கநாதக் கோனார் அவர்கள் தங்க மெடல் பரிசளித்தார்கள்.

2. கனம் ஸ்ரீ எட்டையபுரம் மகாராஜா அவர்களால் 15-11-56 அன்று எட்டையபுரத்தில் முடிவடைந்த 113வது பட்டாபிஷேகத்தில் அளிக்கப்பெற்றது.

3. பாளையங்கோட்டையில் 15-12-57 அன்று நடைபெற்ற 123வது பட்டாபிஷேகத்தில் அளிக்கப்பெற்றது.

4. சென்னை ஷெனாய் நகரில் 6-8-65 அன்று நடைபெற்ற பிரசங்கங்களின் முடிவில் ஸ்ரீபாலஷண்முகானந்த சபையாரால் அளிக்கபெற்றது.

## 8. புத்தகங்கள் பற்றிய விபரங்கள்.

சென்ற 1958ம் ஆண்டு அடியேன் கம்பராமாயணப் பாடல்களைத் தொகுத்து உரைநடையில் பாலகாண்டத்தை "ஸ்ரீராம கதா சாகரம்" என்ற பெயரில் ரிஷிகேசம் ஸ்ரீ சிவானந்த சுவாமிகள் அருளிய முகவுரையுடன் வெளியிட்டு எட்டையபுரத்தில் தூத்துக்குடி V. O. C. காலேஜ் முதல்வராகிய திரு A. ஸ்ரீனிவாச ராகவன் அவர்கள் தலைமையில் மாட்சிமை தங்கிய ஸ்ரீ எட்டையபுரம் மகாராஜா அவர்கட்கு அர்ப்பணம் செய்து வெளியிட்டேன். தமிழுலகம் அன்புகாட்டி வரவேற்று அப்புத்தகத்திற்கு ஆதரவு அளித்தது.

அடியேனது இரண்டாவது புத்தகமாகிய "முருகன் திருவருள்" ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்களின் முகவுரையுடன் 1960ல் வெளியிடப்பெற்று புதுக்கோட்டை அதிஷ்டானம் ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அவர்கட்கு பங்களூர் சத்குரு சேவாமண்டலியாரால் அர்ப்பணம் செய்யப்பட்டது.

இந்நிலையில் அடியேன் மேடையேறி 25 வருடங்களாகிறபடியால் வெள்ளிவிழா மலராக கம்பராமாயண சுந்தரகாண்டப் பகுதியை "ஸ்ரீராம கதா சாகரம்—சுந்தரகாண்டம்" என்ற புத்

கமாக ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்களுடைய முகவுரையுடன் சென்ற 5-12-64 அன்று கோயம்புத்தூரில் ஸ்ரீ N. மகாலிங்கம் M. L. A. பொள்ளாச்சி அவர்களால் வெளியிடப்பெற்று அன்பர்களின் ஆதரவை அமோகமாகப் பெற்றது.

OPINIONS ON SRI RAMAKATHA SAGARAM

# SUNDARA KANDAM

Written by Ramakatha Ratna

# V. THYAGARAJAN

...............You have, by your succinct and illuminating comments, rendered valuable help to the readers. You have, at every stage, pointed out the poetic achievements of Kambar and his supreme verbal falicity and adaptation of sound to sense. Let me congratulate you on your effort and wish your venture all success.

*—Sri Dr. C. P. Ramaswami Iyer, Vice Chancellor, Annamalai University.*

* * *

I read the book once and I feel like reading it over again I enjoyed reading Sundara Kandam rendered very well in your exclusive and devotional style

*—Sri K. R. Sundaram Iyer, Easun Engineering Co, Ltd., Madras.*

* * *

I appreciate very highly the exposition of Sundara Kandam in Kamba Ramayana by SRI RAMAKATHA RATHNA V. THYAGARAJAN.

*—Sri K. S. Ramaswami Sastrigal, Retd Dist. Judge. Madras.*

* * *

"கம்பராமாயணத்தைப் பலமுறை பலபுலவர் விளக்கஞ் சொல்லக் கேட்டிருக்கிறேன். நானும் கம்பச் சொற்பெருழிவாற்றி இருக்கிறேன். எனினும் நமது தியாகராசன் சொல்லும் கம்ப ராமாயண இசைப்பொழிவில் தனிச் சுவையுள்ளது. அவருக்குக் கம்பகலைமணி என்ற பட்டமும் அளித்துள்ளேன். என் உள்ளத்தைத் தொட்ட உரையாளர் தியாகராஜரே"......... "சொல்லுக்கேற்ற உணர்வு, உணர்வுக்கேற்ற குழைவு, குழைவுக்கேற்ற அபிநயத்துடன் அவர் செய்யும் கதை இன்பச் சுதையாகும். தமிழர் ஊர்தோறும் இவரை யழைத்துக் கதை பருக வேண்டும் வாழ்வு திருந்தும் மயக்கந்தீரும். சமயப் பற்றுண்டாகும்.

—ஸ்ரீ ராமகதாசாகரம்-சுந்தரகாண்டம் முகவுரையில் கவியோகி-மகரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்.

P57



…………சுருக்கமும் தெளிவுமான இந் நூல் கம்பன் காவியச் சோலையுள் நுழைவார்க்கு மலைப்பேற்படாமல் செய்வதுடன் கம்பனை முழுதும் கற்க வேண்டுமென்ற ஆவலை ஊட்ட வல்லதாகும். இத் திருப்பணியிலே பேரார்வமுடன் ஈடுபட்டு, ஈட்டும் பெரும் பொருளை நல்லறத்திற்கே ஈந்துவக்கும் இந் நல்லார்க்கு எல்லாம் வல்ல பரம்பொருள் எல்லா நலனையும் அருள வேண்டும் ……..

—திரு. சா. கணேசன், M.L.A,—கம்பர் கழகம், காரைக்குடி.

* * *

சென்ற 12-8-65 இரவு சென்னை அரசாங்க முதன் மந்திரி கனம் ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களின் முகவுரையுடனும், ஸ்ரீ யோகி சுத்தானந்த பாரதியார், கலைமகள் ஆசிரியர் சென்னை ஸ்ரீ K. V. ஜகந்நாதன் அவர்களின் சிறப்புரைகளுடன் கூடிய "ஸ்ரீ மீனாட்சி கல்யாணம்" என்ற நூலை சென்னை I C F கமல விநாயகர் சத் சங்கத்தில் வெளியிட்டு செட்டி நாட்டரசரின் அந்தரங்கக் காரிய தரிசியான ஸ்ரீ V. வைத்திய சுப்பிரமணிய அய்யர் அவர்கட்கு அர்ப்பணம் செய்தேன்.

இது தவிர அடியேன் பிரசங்கங்கள் துவங்குவதற்கு முன்னால் பாடும பாடல்களை தோத்திரமாலை என்ற சிறிய புத்தகமாக வெளியிட்டுள்ளேன்.

——

# 8. MESSAGES

Sri Sri Sringeri Jagadguru Mahasamasthanam
Sringeri Matt Sharada Peesam
P.O. Sringeri-Kadur (Mysore State)

N. Lakshminarayana Sastry
Private Secretary

Camp: Lakshmibai Nagar,
New Delhi-3

TO

Date 21-6-67

Sri V. Thyagarajan
3119, East Second Street, Pudukkotta-1
(Trichy Dt.—Madras State)

விஞாபனம்:

தாங்கள் எழுதிய கடிதமும் ஸ்ரீமத் ராமாயண உபன்யாச அழைப்பிதழும் கிடைக்கப் பெற்றோம. மகா சன்னிதானத்தில் சமர்பிக்கப்பட்டது தாங்கள் தீர்க்காயுளாய் இவ்விதமான

உபன்யாசங்கள் பல செய்து மக்களுக்கு பக்தி மார்க்கத்தில் ஈடுபாடு செய்து வாழவேண்டுமென ஆசீர்வதித்து அருளிய மந்திராக்ஷதை ஸ்ரீ சாரதா சந்திரமௌளீஸ்வரப் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

இப்படிக்கு,
N. Lakshminarayana Sastry
Private Secretary
To His Holiness Jagadguru
Mahaswamigalavaru of
Sri Sringeri Mutt.

---

His Holiness Sri Kanchi Kamakoti Peetathipathi
Jagadguru Sri Sankaracharya Swami Mutt.
Kanchipuram

Camp: Ramachandrapuram, P. O. Date: 10--7—67

V. Thyagarajan
Pudukkottai.

தாங்கள் 5-6-57 அனுப்பி வைத்த கடிதம் கிடைத்தது. ஸ்ரீமகா சன்னிதானத்தில் விஞாபனம் செய்து கொள்ளப்பட்டது ஸ்ரீ மகா சன்னிதானத்தில் அனுக்கிரகம் செய்த பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிற விவரம் தெரிவிக்கலான காரியம்.

..........................

Manager.

* * *

"Girija"
30, Edward Elliots Road,
Mylapore, Madras, 4
May 29, 1967

Dear Sri Thyagarajan,

My best wishes for the success of your endeavour.

Yours sincerely,
S. Radhakrishnan.

Sri V. Thyagarajan,
3119, East Second St,
Pudukkottai - 1 (Trichy Dt)

* * *

M. Bakthavathsalam.

"Mallika"
15, Warren Road,
Mylapore, Madras-4
Camp: OOTY.
27--5--67

My Dear Sri Thyagarajan:

I am in receipt your kind note dated the 25th. for which I thank you. I am glad to hear about your sacred vow to deliver another 108 series of Ramayana lectures. I have great appreciation for your devotion which does bestow on you abundant strength and capacity. I offer to you my warmest felicitations and best wishes.

With regards,

Yours sincerely,
M. Bakthavathsalam.

---

PADMASREE
V. Nagayya

Telephone: 442295
Madras-17
Date 25-5-1967

My Dear Sri Thyagarajan,

It is with supreme pleasure that I learn from your kind and affectionate letter that you are shortly performing the third round of 108 Sri Rama Pattabishekam Harikathas. I must say, it is given to only a very few, to avail of such great opportunities and such few persons are called "PUNYA PURUSHAS". You are therefore undoubtedly one among such "PUNYA PURUSHAS"

There are many Bagavathars in our land, but, only a few of them render 'Harikatha" in their pure and prestine form to elevate the mankind to cultural and spiritual heights and you are easily one among such great Bagavathars. You are a gifted soul and your performances keep the audience spell bound throughout. This is why you are blessed with continuous success in your performances one after another.

I sincerely and wholeheartedly pray Lord Sri Rama to shower His choicest blessings on you to enable you to perform thousands of such Pattabishekams in your full span of happy, contented, prosperous, peaceful, active and healthy life.

With love,
Yours affectionately,
V. NAGAYYA

46, Lloyds Road,
Royapettah, Madras
6—6—67

My Dear Sir:

I am glad to receive your letter of 2-6-67 and am glad to learn that you are delivering your Ramayana lecture No. 216 at Arkonam. I wish all success to the completion of your vow. The supreme Hindu ideal is world-happiness. (Lokakshema) and bakthi (devotion to God),

Yours sincerely,
K. S. Ramaswami Sastrial, (Retd. Dist. Judge)

---

N. Mahalingam, B. Sc., M.I.E.

Phone: 75709
38, Chamiers' Road.
MADRAS 28
July 6, 1967

Dear Thyagarajan,

Thanks for your letter of the 5th July. I am very happy that you have completed two series of Ramayana lectures of 108 each. It is more gratifying to learn that you propose to do another one of 108.

Ramayanam, the great epic contains the Hindu Culture and I am sure all Hindus get lessons in this life from Ramayanam sometime or other. All the human failures and greatness are depicted in various individuals, so that the normal man may know the reactions of others when certain actions take place

It is not only for the glory of the Lord, but also for the proper conduct of men and women that the two great epics have been given to us. Your efforts to propogate one of the great epics of Hindu religion are to be highly appreciated and commended.

With best wishes,

Yours sincerely.
N. Mahalingam,

---

உ இடம்: பவானி

கிருபானந்தவாரி முருகா காலம்: 13-7-67

வேலை வணங்குவதே வேலை

**நேரிசை வெண்பா**

புகழ் தியாகராஜன் புதுவைநகர் வாழ்வோன்
திகழ் கம்பன் சீர் பொழியும் செம்மல்—தகவுடனே
பல்லாண்டு வாழ்க பரமன் திருவருளால்
எல்லா நலமும் இசைந்து.

அன்பன்,

கிருபானந்தவாரி.

---

உ

முருகன் துணை.

**வாழ்த்து**

கம்பனெனும் கவிமேகம் அமுதமாரி கனிந்து சுரந்ததுபோல
[இராமகாதை
பம்பு சுவைக் காப்பியமாப் பாடியிந்தான் பருணிதரும் பாமரரும்
[அதன் சீர்தேர்ந்து
நம் புதுமைத் தமிழ்க் கவிதையீதென்றின்பம் நண்ணுகின்ருர்
[நாள் நாளும் அதன் சீர்ஓங்கி
இம்பரெங்கும் பரவுகின்ற இயல்பு கண்டோம்: இக்கவிஞர்க்கிணை
[யாரே எனவியந்தோம்!

அவன் கவியில் தோய்ந்து சுவை மாந்திப் பல்லோர் அருங்கதை
[யும் கவிச்சுவையும் உணருமாறு
நவம் பெருகும் சொற்பொழிவாய் இசையைக்கூட்டி நனிபகரும்
[திருத்தொண்டைச் செய்து நின்ருன்
சிவம் பெருகும் குலமறையோன் தியாகராஜன் செஞ்சொல்லான்:
[பத்தி நிரம்பிய உள்ளத்தான்
பவம் பெருகா வகையருளும் இராமன் பாதம் டன்ஞளும் நம்பி
[வளர் இயல்பு பெற்ருேன்.

இதுகாறும் இருநூற்றுப் பதினைருகும் எண்ணுள்ள முறைகளி
[ராமாயணத்தை
மதுவேறும் சுவையென்ன விரித்தான். இந் நாள் வானிநதி
[காவிரியோடு கலக்கும்
புதுவேரிப் பொழிலுடைய திரு நணுவில் புகழோங்க மூன்ரு
[மட்டோத்தரஞ்சார்
சதமானமுறைதொடங்குகின்ருன் வேலன் தண்ணருளால் அவன்
[தொண்டு வாழ்க! வாழ்க!

வாழ்நாளின் பயனிதுவே என்னக்கொண்டு மாக் கவிஞன் கம்ப
[ராமாயணத்தை
ஆழ்பாவின் சுவை பலரும் உணர்ந்து மூழ்க அருஞ் சொல்லால்
[பிரவசனம் பண்ணுகின்ருன்
சூழ்சிரின் மணம் பரவப் பொருளும் சேரத் தூயவர்கள் உரை
[யாசி கவசமாக
ஏர்பாவும் உடல் நலமும் உள்ளப்பாங்கும் இணைந்து தியாகராஜன்
[ருன் இனிது வாழி.

கலைமகள் காரியாலயம்
சென்னை-4

அன்பன்.
கி. வா. ஜகந்நாதன்

——

உ

திருச்சிற்றப்டலம் கோயம்புத்தூர்

அன்புள்ள தியாகராசு! வாழ்க. 21-6-67

வெண்பா

ஊன்றுபுகழ்க் கம்பன் உரைத்த விராமாயணத்தில்
மூன்ரும் நூற்றெட்டு முடிசூட்டுச்—சான்ருேர் முன்
செய்ய விரும்புன் முயற்சி சிறப்புறுக
ஐய தியாகராச.

அன்புள்ள,
கு. நடேச கவுண்டர்.

———

காரைக்குடி
31-5-67

அன்பீர்!

வணக்கம். உங்கள் 23-5-67 கடிதம் மிக்க மகிழ்ச்சி. மூன்ருவது நூற்றெட்டுச் சங்கல்பம் எடுத்துக் கொள்ளப் போகும் உங்கட்கு இராமனருளும் எந்தைபிரான் கம்பன் எழிற் கருணையும் நிரம்புவதாக என்று மனமார வாய்மணக்க வாழ்த்து கிறேன்.

இராமாவதாரத்தைக் கற்பதும் கதைப்பதுமே வாழ்வின் பயன் என நம்பி ஒழுகும் உங்கட்கு அவனருட்க் குறையு முண்டோ?

ஆன்றகவி கம்பன் அருள் இராமகாதையினைச்
சான்ருேர் பலர் முன்னே சாற்றி வரும்—தோன்றல்
திருத் தியாகராஜன் தினந்தினமும் ஓங்கி
அருத்தியுடன் வாழ்க அமைந்து.

அன்பன்
சா. கணேசன்.

* * *

உபன்யாச சக்கரவர்த்தி பிரம்மஸ்ரீ S. அனந்தராம தீக்ஷிதர். அவர்கள் தனது வடகுடி முகாமிலிருந்து 19-6-67 அன்று அனுப்பியுள்ள செய்தி:—

பரம ஆப்தர்களும், உபன்யாச சிம்மமுமாகிய ஸ்ரீ தியாக ராஜய்யர் அவர்களுக்கு சர்வ மங்களங்களும் உண்டாகும்படி ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்து எழுதியது: உபயக்ஷேமம். தங்கள் பத்திரிகை பார்க்க சந்தோஷம். ஸ்ரீ கம்பர் ந்ருசிம்மோபாசகர். அப்படிப்பட்டவருடைய நூலை நூற்றுக்கணக்கான முறை உபன்யாசித்து பக்தர்களிடையே நல்ல பக்தியை ஏற்படுத்தி யிருக்கிறீர்கள். இந்த பாக்கியம் எல்லோருக்கும் கிட்டாது; ஸ்ரீ பகவதனுக்ரகத்தால் ஆயிரமாயிரம் இம்மாதிரி பட்டாபிஷேகங் களை நடத்தக் கோருகிறேன். இங்கு நடந்து வரும் சோம யாகத்தை முன்னிட்டு இங்கு வந்தேன். 22-6-67 வரை தங்கிப் பின் சேலம் போகிறேன்.

(Sd.) அனந்தராம தீக்ஷிதர்

* * *

AUM
YOGA SAMAJ
Shuddhanahda Press. Shuddhananda Library
Sri Ramnagar, Adyar, Madras-20
Editor: Call Divine

29—7—67

கம்பக்கலைமணி வாழ்க!

இராமனுக்கு 216 தரம் கம்ப முடி கவித்த தங்கள் புலமை பொலிக! இன்னும் பன்முறை பட்டாபிஷேகம் காணப் பரமன் அருளுக!

ஓவியச் சொற்களாலே ஒன்பது சுவையுங்காட்டி
நாவியல் அமுதளாவி நமதருந் தியாகராசன்
காவியச் சிகரமான கம்பராமாயணத்தைத்
தேவியலின்பமோங்கத் திருமுடியணியச் செய்தான்!

பண்ணுடன் இவன் எங்கம்பன்பனுவலைப் பகரும்போது
கண்ணுடன் கையும் பேசும் காலுடன் கூத்தும் பேசும்
பெண்ணுடன் ஆணும் பேசும் பேச்சறப் பெரிய கூட்டம்
உண்ணமுதெனவே அள்ளியுவந்திடும் இன்பமாமே!

சுத்தானந்த பாரதி

---

உ
சிவமயம்

தமிழ்க்கடல்: சிவமணி:
சிவம்பெருக்கும்சீலர்
ராய. சொக்கலிங்கன்
இயக்குநர்:தமிழாராய்ச்சித்துறை
அழகப்பா கல்லூரி

போன்: அழகப்பாபுரம்
எண். 69.
காரைக்குடி-3
(இராமநாதபுரம் மாவட்டம்)
31—7—67

அன்பு நிரம்பிய தியாகராஜன் அவர்களுக்கு,

வாழ்த்து. தங்கள் 18-7-67 கடிதம் கிடைத்தது. தாங்கள் இராமபிரானுககு இரண்டு 108 முறை சூட்டிவிட்டு மூன்ருவது 108 முடி சூட்டிற்கு முனேந்திருப்பதுபற்றி மிக்க மகிழ்ச்சி.

இலக்கியத்தில் இராமபிரான் ஒரு முறை தான் முடி சூடினன். தாங்கள் அவனுக்கு மிக்க பல முறை முடி சூட்டுவது பெருமைக்கு உரியது. தங்கள் முயற்சி வாழ்க! வெல்க!

அன்புள்ள,
ராய. சொ.

---

# [ எதிர் நீச்சல். ]

தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக் கானடைந்த காகுத்தன் வாழ்க்கையில் என்னை மிகவும் சோதித்தான். ஐந்து வயதில் தந்தையை இழந்த நான் சொந்த ஊராகிய கோயம் புத்தூரை விட்டு மதுரையில், என் தாயின் பிறந்த வீட்டில் வளர்ந்தேன். எங்கள் குடும்ப நலம் கருதி வாழ்த்தி வந்தவரும் எனது குருநாதருமாகிய ஸ்ரீமான் N. R. கிருஷ்ண சுவாமி ஐயங்கார் அவர்களின் தொடர்பு எனக்கு மதுரை வாசத்தினுல் ஏற்பட்டது. மதுரை நாயகியாம் மீனுட்சி அம்மையை அடிக்கடி தரிசித்ததால் தமிழில் எனக்குப் பற்றும் ஏற்பட்டது. "கொடிது கொடிது வறுமை கொடிது; அதனினும் கொடிது இளமையில் வறுமை" என்பதை வாழ்கையில் பூரணமாக அனுபவித்தவன் நான். வாழ்க்கையில் பல பேர்களால் சிறுமைப்படுத்தப்பட்டேன். ஒருவராவது என் சிறிய வயதில் எனக்கு நல்வார்த்தை கூறி இன்முகம் கொடுத்துப் பேசியதேயில்லை. அந்த நல்லவர்கள் எல்லாம் என்னைக் கைதீண்டி அடித்ததேயில்லை. விறகுகட்டை, ஊதுகுழல், கரண்டிக்காம்பு இவைகள் எத்தனையோ உடைந்தும் வளைந்தும் போயின. 97 மார்க் வந்தால் பாக்கி மூன்று மார்க்குகள் ஏன் வாங்கவில்லை என்று அடி விழுந்தது. என் தந்தை பரம்பரையான வித்துவான்களின் வம்சத்தில் பிறந்தவர். அதன் காரணமோ அல்லது வேறு ஏதாவது தெய்வீகமான காரணமோ எனக்கு வெகு சிறிய வயதில் தமிழில், முக்கியமாகக் கம்பனில் ஈடுபாடு ஏற்பட்டது. 1939-ம் வருடம் மதுரையில் எனது 12-வது வயதில், அகில இந்திய வர்ணாஸ்ரம ஸ்வராஜ்ய சங்கத்தின் யுவர்களின் கிளையான தார்மீக யுவக சங்கத்தின் காரியதரிசியாகப் பணி செய்யும் பாக்கியம் கிட்டியது. அது போது மேடையேறிப் பேச ஆரம்பித்துக் கடைசியில் கம்ப ராமாயணப் பிரசங்கியாகி விட்டேன். அப்போது என்னை "முட்டாளே! கம்ப ராமாயணம் படிக்க ஆரம்பித்து விட்டாய் அல்லவா? ஒரு செம்பை எடுத்துக் கொண்டு பிச்சை வாங்கப் போ" என்றெல்லாம் வைது புத்தகத்தைப் பிடுங்கினர். இப்படி பேசியவர்கள் சமீபகாலத்தில், கம்பன் பெயரால் பொருளீட்டி வாழும் எனது இல்லத்தில் வந்து தங்கி விருந்துண்டு மகிழ்ந்தனர். அவர்கள் கடுஞ்சொல்லால் என்னை வதைத்ததற்குப் பதிலாக அவர்களுக்கு இன்முகம் காட்டி உபசரிக்கும் பேற்றை யளித்த தமிழின் பெருமையையும் ஸ்ரீராமனின் கருணையையும், எண்ணி எண்ணி வியக்கிறேன்.

ஏழையாகித் தந்தையற்ற நிலையிலிருந்து கவலையடைந்த என்னை, பணக்காரர் என்ற போர்வையில் மறைந்த சிலர் பலபாடு படுத்தித் துயரப்படுத்தினர். எனது நெருங்கிய தெய்வம், எனது முன்னேற்றங்கண்டு மகிழ வேண்டிய தெய்வத்தை என்னிடமிருந்து பிரித்தனர். வாழ்க்கையில் தாங்க முடியாது இன்னும் நான் குமுறிக் கொண்டிருக்கும் சோகங்களில் இது ஒன்று. நான் வாழ்க்கையில் முன்னேற்றமே அடையமாட்டேன், வாழ்க்கை பூராவும் தங்களிடமே அடிமையாக, தினம் தினம் உணவிற்கே எதிர்பார்ப்பேன் என்று எண்ணியவர்களின் எண்ணம் ஈடேருமல் நானும் வயிரூர உண்டு மேலும் பத்து விருந்தினர்சட்கும் விருந்தோம்பும் பெருநிலையில் இராமன் என்னை வைத்துள்ளான். தமிழ் தன்னை நம்பினவரைக் காப்பாற்றும் என்பதற்கு என் வாழ்க்கையில் இதுவே உதாரணம்.

இன்றைக்கும் எனது உறவினரில் சிலர் நான் எப்படியோ உலகத்தில் வாழுகின்றேனே என்று பொருமையால் வெடித்துக் கொண்டே இருக்கின்றனர். அவர்கள் யாவருடைய மனத்தையும் மாற்றி அவர்களை அன்பின் உருவமாகச் செய்து எனக்கு அளிக்க வேண்டுமென்று தமிழ்த் தெய்வத்தின் திருவடிகளைச் சதா காலமும் வணங்கிக் கொண்டேயிருக்கிறேன்.

* * *

மதுரையில் வசிக்கும் காலத்தில் ஒரு நாள் தற்செயலாக வைகையில் முழுகிக் கொண்டே "தாயே! மீனுட்சி! கம்பனின் இராமகாதையை வாழ்க்கையில் நூற்றெட்டு முறையாவது மக்களிடம் எடுத்துரைக்கும் ஆற்றல் கொடு" என்று வேண்டினேன். தற்செயலாக எடுத்துக் கொண்ட அந்த பிரதிக்ஞை 1956-ம் வருஷம் நிறைவேறியது. கல்கத்தா பாரதியார் சங்கத்தில் 24-6-1956 அன்று இரவு அடியேனது 108-வது ஸ்ரீமத் கம்பராமாயண பட்டாபிஷேகம் நிறைவேறியது. இது முடியும் முன்னரே ரிஷிகேசத்தில் ஸ்ரீ சிவானந்த ஆஸ்ரமத்தில் ஸ்ரீ சிவானந்த சுவாமிகள் திருமுன்னிலையில் அடியேனது 105-வது பட்டாபிஷேகம் 16-4-1956தொடங்கி 2-5-1956 அன்று முடிந்தது. ஸ்ரீ சிவானந்த சுவாமிகள் அவர்கள் "கம்பராமாயண ஜோதி" என்று பட்டமளித்து மீண்டும் 108 முறைகள் இராமாயணம் பிரசங்கம் செய்யும்படி கூறினர்கள். கங்கை நதியின் கரையில் 2-5-1956 அன்று மீண்டும் 108 முறைகள் கம்பராமாயணப் பிரசங்கங்கள் செய்வதாக பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு, ஸ்ரீ சுவாமிஜி அவர்களின் ஸ்தாபனமாகிய திவ்ய ஜீவன சங்கத்தின் அரக்கோணம் கிளையில் சென்ற 13-5-1967 அன்று இரண்டாவது 108 (அதாவது 216-வது) பட்டாபிஷேகம் நிறைவேறியது இந்த 216 இடங்களிலும் ஏற்பாடு செய்து உதவிய

அன்பர்கட்கும் என்னை ஆதரித்த தமிழ் அன்பர், இராம பக்தர் அனைவருக்கும் எனது நன்றியைத்தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*   *   *   *

''தியாகராஜன் சுக புருஷர். விமானத்திலும் முதல் வகுப்பிலும் பிரயாணம செய்கிறார். சந்தோஷமானவர். இராமன் கருணை அவரை நன்றாகவே வைத்திருக்கின்றது'' என்றெல்லாம் என்னைக் கண்டு மயங்கி, அறியாது பேசிவரும் அன்பர் சிலர் உண்டு. ஒவ்வொரு மேடைப் பிரசங்கியும் தொடர்ப் பிரசங்கங்கள் செய்ய ஒப்புக் கொண்டு, அவன் அதை வெற்றிகரமாகச் செய்து முடித்து அவ்வூரை விட்டுப் புறப்படுவது மிக மிகக் கடினமான காரியமாகும். பலவிதமான மனோபாவங்களும், சுபாவங்களும் நிறைந்த மக்களையும் ஏற்பாடு செய்தவரையும் நல்லமுறையில் பேசித் திருப்திசெய்து நல்ல பேர் எடுத்துக் கொண்டு வருவதிலுள்ள கஷ்டம் இறைவனுக்குத் தான் தெரியும். இதில் எனக்குப்பல அனுபவங்கள் உண்டு.

என்னை வரவழைத்த ஒரு சிலர் தங்கள் வீட்டைவிட்டு எங்கும் செல்லக்கூடாது. எவருடனும் பேசவேகூடாது என்று தடை செய்தனர். இந்த அறியாமையை எண்ணிச் சிரிக்காமல் என்ன செய்வது! ''கம்பன் எவ்வளவு சமஸ்க்ருத ஸ்லோகங்கள் பாடியிருக்கிறான்! பாவி! ஒன்று கூட உன்வாயில் வரவில்லையே! என்று ஒரே போடாகப் போட்டார் ஒரு பெரியவர். இதை எண்ணிச் சிரித்து என் வயிறு இன்னும் புண்ணாகிக் கொண்டிருக்கின்றது! தமிழ்ப் படித்தவன் என்ற ஒரே குற்றத்திற்காக. என்னைத் திண்ணையில் உட்காரவைத்து விட்டு என் எதிரிலேயே தான் மாத்திரம் காப்பியோ சிற்றுண்டியோ உண்ட அன்பர்களும் உண்டு. ''எங்களுக்கு உங்கள் மீது தான் அன்பு! தமிழில் எங்களுககுச் சிரத்தை கிடையாது. உங்கள் மீதுள்ள அன்பின் காரணமாகவே உங்களை எங்கள் ஊருக்கு உபன்யாசத்திற்கு அழைக்கின்றோம்'' என்று ஒரு சமயம் ஒரு அன்பர் கூறினார். ''தமிழை வெறுக்கும் உங்கள் சமூகத்திற்கோ சபைக்கோ நான் வரவிரும்பவில்லை. உங்கள் அன்பே போதும்'' என்று வரமறுத்தேன். ''நான் அப்படிச் சொல்லவேயில்லை. நாங்களெல்லாம் தமிழ் விரோதிகளா! உன் அவ்வளவு நாங்கள் படிக்காவிட்டாலும் ஏதோ நாங்களும் தமிழ்ப் படித்துக்கொண்டு தான் இருக்கிறோம்'' என்று நான் பொய் சொல்லிவிட்டதாக மேலும் ஒரேயடியாகச் சாதித்து விட்டார்! சிரிப்பதா என்ன செய்வது' ''யாரோ எழுதின கதையை நீ திருப்பித் தானே சொல்லுகிறாய! உனக்கு எதற்குச் சம்பாவனை?'' என்று கேட்ட

வர் ஒரு வகை. ''நாங்கள் கோயம்புத்தூர். நீங்கள் அந்த ஊர் இந்த ஊர்'' என்றெல்லாம் ஊர்களின் வித்தியாசம் காரணமாக வும், நெற்றியில் விபூதி தரித்தவன் இராமாயணம் சொல்லலாமா இராமாயணம் சொல்லக் கூடியவன் முருகனைப் பற்றிப பேச லாமா? திருவிளையாடற் புராணம் சிவலீலா முதலானவற்றை உபன்யாசம் செய்பவன் திருமாலின் நாமத்தைக் கூறலாமா? என்றெல்லாம் சிவ விஷ்ணு பேதங்காரணமாகவும், உள்ளூர்ப் பூசல்களில் உள்ள மன வருத்தங்களையெல்லாம் உபன்யாசம் செய்ய வந்திருக்கும் பிரசங்கியிடம் கூறி அவனை ''பகவானே! இந்தச் சிக்கலில் இருந்து எப்படி நல்ல பெயரெடுத்துக் கொண்டு வெளியேறுவோம்'' என்று ஏங்க வைக்கும் அன்பர் சிலர். காரண மில்லாமலே பிரசங்கம் செயபனுக்கு நேரிலேயே மொட்டைக கடிதம் எழுதியும், அவனைப் பற்றிப பிறருக்குத் தூஷணைசெய்து எழுதி அவனது முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டை போடும் சிலர் ஒரு புறம்.

எனது அனுபவத்தில் நடந்த சில சம்பவங்களை அன்பர் களிடம் கூற விரும்புகிறேன். ஓரிடத்தில் எனது பிரசங்கம் ஏற் பாடாகியிருந்தது. முக்கியஸ்தர் ஒருவர் யாது காரணத்தாலோ நமது பிரசங்கம் நடப்பதை விரும்பவில்லை. முதல் நாள் தலைமை வகிக்க இருந்த அன்பருக்குப் பிரசங்கம் செய்பவர் வரவில்லை என்ற செய்தி அனுப்பிவிட்டார். என்னிடம் ''தலைமை வகிக்க அவர் வரமுடியவில்லை. அவருக்கு உடம்பு சரியில்லை. நீங்கள் திரும்பிப் போய்விடுங்கள். இன்னொரு முறை ஏற்பாடு செய்ய லாம். அவர் இல்லாமல் ஆரம்பித்து நடத்தினால் பின்னால் இடைஞ்சல்கள் நேரும்'' என்று கூறினர். நானும் ஊர் திரும்பத் தயாராகி விட்டேன். அது நேரத்தில் இடையிலிருந்த சிலர் ''ஒரு மனிதருக்காக ஊரெல்லாம் அறிவித்து விட்ட காரியத்தை நிறுத்தக் கூடாது. நடத்தத் தான் வேண்டும்'' என்று நடத்தியே விட்டனர் ஆயிரக்கணக்கான மக்கள் கேட்டு ஆனந்தித்தனர். முதல்நாள் தலைமை வகிக்க வேண்டிய அன்பர் கடைசி நாள் தலைமை வகித்தார். அவரிடமே உண்மையைக் கேட்டு அறிந்து ஆச்சரியப்பட்டேன்!

பிறிதோரிடத்தில் நமது பிரசங்கம் ஏற்பாடு செய்து என்னையே பத்திரிகைகள் அடித்து அனுப்பச் சொல்லி, நான் பிரசங்கத்திற்காகப் போய் இறங்கிய பின்னும் பத்திரிகைகளை யாருக்குமே அனுப்பாமல் ''பூக்கடைக்கு விளம்பரம் எதற்கு? உன் உபன்யாசம் என்று காதில் கேட்டால் வரும் ஜனங்கள் போதாதா அவர்கள் தான் உண்மையான பக்தர்கள்! ஐந்து பேர் வந்தால் கூடப் போதுமே!'' என்று கூறி 3 நாட்களிலேயே என் பிரசங்

கத்தை முடித்து ஊருக்கு அனுப்பினுர் ஒருவர். பத்திரிகைகள் யாவும் அவருக்கு ஒரு பக்கம் எழுத உபயோகப்படுத்திக் கொண்டார்! இது ஒரு ரகப!

ஓரிடத்தில் முக்கியமான கட்டம் பிரசங்கம் செய்ய வேண்டியிருந்தது. சோக நாடகமாக இருந்த அந்த இடத்தை மக்களின் மனதில் பதியவைக்க சுமார் இரண்டுமணி நேரமாவது வேண்டும் "முக்கியமான ஒருவரைத் தலைமைவகிக்க அழைத்திருக்கிறேன். உன் உபன்யாசத்தை அரைமணி நேரத்தில் முடிக்கவேண்டும். எப்படிச் செய்வாயோ தெரியாது. உன் இராமாயணம் எங்களுக்கு முக்கியமில்லை அவர் பிரசங்கம் தான் மிக முக்கியம்" என்று கூறினுர் ஒரு அன்பர். 'அவர் பிரசங்கத்தை இன்று வைப்போம். எல்லாரும் ஆனந்தமாகக் கேட்போம் நாளை நமது இராமாயணத்தைத் தொடருவோம்" என்று நான் கூறிய பதிலைக்கேட்டு அவர் கோபமடைந்து விட்டார். இராமகதையைச் சுருக்கி ஜனங்களுக்குத் துரோகம் செய்யக்கூடாது என்று நான் எவ்வளவோ கூறியும் அவர் அதை லட்சியம் செய்யவேயில்லை. நல்ல வேளையாக அன்று தலைமைக்கு வந்தவர்கள் இரண்டுமணி நேரத்தை எனக்குக் கொடுத்து என் சேவையைச் செம்மையாகச் செய்ய அனுமதித்ததுடன் தானும் ஒருமணிநேரம் சொற்பொழிவாற்றி எங்களெல்லாரையும் இன்பத்தில் ஆழ்த்தினுர். அன்று அந்த அன்பரிடமிருந்து நல்ல வேளையாகத் தப்பின நான் இன்னும் அந்த ஊர்ப்பக்கமே திரும்பவில்லை," பணம் பெரிதல்ல சேவைதான் பெரிது. மக்களுக்கும் இறைவனுக்கும் அது மகிழ்ச்சியை அளிக்கும் என்று புரிந்து கொள்ளுவதில்லை.

இதுதவிர என்மாதிரியான தொழிலில் உள்ளவர் எனக்குச் செய்த சில காரியங்களையும் சொல்லுதல் அன்பர்கட்கு ஆச்சரியத்தை உண்டாக்கும். அடியேன் மேடையேறி 27 வருடங்களாகின்றன. சுமார் பத்து பன்னிரண்டு வருடங்களாக மேடையில் பேசிவரும் அன்பர் ஒருவர் " தியாகராஜன் கெட்டிக்காரன். முன்னுக்கு வரவேண்டியவன். என்னிடம் கம்பராமாயணப் பாடம் கேட்டவன்" என்ருர். என்குருநாதரான திருவாளர் N. R. கிருஷ்ணசுவாமி அய்யங்கார் அவர்களிடம் இதை நான் கூறினேன். "இதில் வருத்தப்படுவதற்கு என்ன இருக்கிறது? உன்னைத் தன்னுடைய சீடன் என்று அழைப்பதை அவர் தனக்குப் பெருமையாக எண்ணிக் கொள்கிருர். தினமும் கதை தொடங்கும்போது அவரையே குருவாக எண்ணி ஒரு கவிபாடிக் கொண்டே ஆரம்பித்துவிடு" என்ருர் கருணைக்கடலான அவர்

எனக்குக் கூறிய புத்திமதி கேட்டு நான் என் வருந்தம் நீங்கினேன். ஆனால் பிறிதொருவரைக் குருவாகக் கொண்டு கவிபாடச் சொன்னதை நான் ஏற்றுக் கொள்ளவில்லை

* * *

இன்னொரு பிரசங்கி "தியாகராஜனுக்குப் பொன்னாடை வேறு போர்த்துகின்றார்கள்? தானே வாங்கிப் போர்த்தும்படியாகச் சொல்லுகிறான். பெரிய மனிதனாக இது ஒருவழி'' என்று ஒரேயடியாகச் சாதித்துப் பிரசாரம் செய்து வருகிறார். இது மாதிரி இன்னும் எத்தனைபேர் பிரசாரம் செய்கிறார்களோ! செய்வார்களோ! ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்; இப்படித் தவறுதலாக எண்ணக்கூடியவர்கள் நான் 216 பட்டாபிஷேகங்கள் செய்தது, எனக்குப் பொன்னாடை பட்டங்கள் அளிக்கப்பட்டதெல்லாம் பொய் என்று கூறலாம்; என்வீட்டில் எனக்கு அளிக்கப்பட்ட உபசாரப் பத்திரங்கள் வீடு நிறைய மாட்டப்பெற்றுள்ளன! ஒருவேளை இவைகளைக்கூட நான் சொந்தச் செலவில் அச்சடித்து சட்டம்போட்டு சுவற்றில் மாட்டிக் கொண்டேன் என்றும் கூறலாம்; இத்தனைக்கும் இந்த மாதிரி பிரசாரம் செய்து வரும் பிரசங்கியாரை நான் பார்த்ததேயில்லை. அவர் என்னைச் சந்தித்திருப்பாரோ என்னவோ தெரியாது.

ஒரு காலத்தில் பட்டங்கள் பெறவேண்டும். பொன்னாடை போர்த்திக் கொள்ளவேண்டும் என்ற ஆசையிருந்தது. அளவுக்கு மீறி இராமபிரான் இவற்றை எனக்கு அளித்துவிட்டான். அறியாமை காரணமாக அன்பர்கள் செய்யும் இந்தப் பிரசாரம் தவறுதலானது என்பதை எடுத்துக்காட்டும் வகையில் அடியேனுக்குப் பொன்னாடைகள் போர்த்தப்பட்ட தேதி முதலான விபரங்களும் பட்டங்கள் அளிக்கப்பெற்ற விபரங்களும் இம்மலரில்சேர்க்கப்பெற்றுள்ளன. நான் எவருக்கும் போட்டியல்ல. கணவனும் மனைவியுமேயான சிறு குடும்பமுடைய எனக்கு சகவித்துவான்களை வரவேற்று உபசரிப்பதே வாழ்க்கையின் பெரும் பயன் எனக்கருதுபவன். புதுக்கோட்டைக்கு வரும் வித்வான்களில் அனேகர் "ஸ்ரீ ராமகதா நிலையம்'' என்று பெயருள்ள அடியேனுடைய குடிசையைத் தங்கள் இல்லமாக நினைத்து வருவர். நானும் என் மனைவியும் அடிபணிந்து அவர்களை வரவேற்று உபசரித்து எங்களாலான சம்பாவனையோ சன்மானமோ இதுவரை செய்துகொண்டிருக்கிறோம். இனியும் செய்வோம். எனவே வித்வான்கள் எவரானாலும் அடியேனுடைய இல்லத்திற்கு எழுந்தருளி என்னை ஆசி கூறவேண்டுகிறேன்.

இனி வருங்காலத்தில் அன்பர்கள் எவரும் எனக்குப் பொன்னாடையோ, பட்டமோ, உபசாரப்பத்திரமோ அளிக்கக்

கூடாது என்று பணிவன்புடன் வேண்டிக்கொள்ளுகிறேன். இது மற்றவர் கூறுவது கேட்டு வருத்தத்திஞல் அல்ல. பொன்ஞடை, பட்டங்கள், உபசாரப்பத்திரங்கள் மனதில் நான் பெரியவன் என்ற எண்ணத்தை உண்டாக்குகின்றன. இந்த எண்ணம் வராமற் தடுப்பது தானே இறைவனை அடைவதற்கு வழி! இதை எல்லாம் நான் எழுதுவது வருத்தத்திஞல் அல்ல. இந்தத் தொழில் செய்யும்போது எவ்வளவு எதிர் நீச்சல் போடவேண்டியுள்ளது என்பதைக் காட்டவே ஆகும்!

* * *

இந்த நிலையில், 216-வது பட்டாபிஷேகம் முடித்துள்ள நல்வேளையில் எனக்கு நன்மை செய்துள்ள ஆயிரக்கணக்கான நண்பர்களையும் அன்பர்களையும் நினைவு கூர்ந்து நன்றியுடன் அவர்கள் யாவரையும் வணங்குகிறேன். 1951ம்-ஆு எனது இராமாயணம் 34வது பட்டாபிஷேகம் ஈரோட்டில் நடைபெற்றது. யாதோ காரணத்திஞல் எவரோ எனக்கு ஏதோ சூனியம் (ஆபிசார பிரயோகம்) செய்து நான் உணவருந்தமுடியாது செய்து விட்டனர். இலையில் உணவு பரிமாறிஞல் அது ஏதோ புழுக்கள் மாதிரிக் கண்களில் தெரியும். அந்நிலையில் ஈரோட்டில் பிரபல வக்கீலாக விளங்கிவரும் ஸ்ரீ K R. கிருஷ்ணசுவாமி அய்யர் தம்பதிகள், என் கண்களைக் கட்டி, உணவைத் திரவமாகக் கரைத்துக் குடிக்கும்படிச் செய்து, தேவிதாஸ் என்ற ஒரு பக்தரை ஏதோ பூஜை செய்யச்சொல்லி சூனியத்தை நிவர்த்தி செய்து என் உயிரைக் காப்பாற்றினர் வாழ்க்கை பூராவும் நான் அந்த தம்பதிகளுக்கு கடமைப்பட்டவன் என்பது தவிர என்ன கூறமுடியும்? அவர்கள் குடும்பம் நீடூழிதழைத்து வாழ இறைவனை வேண்டுகிறேன்.

கோயம்புத்தூரில் ஏங்கி வருத்தப் படும்படியான சில சில காரியங்கள் நடந்தன. அந்நிலையில் கோவையைச் சேர்ந்த பிரபல ஆடிட்டர் ஸ்ரீமான் M. S. ஜகந்நாதய்யங்கார் தம்பதிகள் எனக்கு ஆதரவு காட்டி நானும் ஓரளவு வித்வான் என்பதை கோவை மக்களிடம் நிரூபிக்கச் செய்து இருமுறைகள் தமது கையாலேயே பொன்ஞடை போர்த்தி என்னை கௌரவித்து என் தாய் நாடு என்னை ஏற்றுக் கொள்ளுமாறு செய்தனர். ஈரோட்டிலுள்ள தெய்வீக தம்பதிகள் உயிரைக் காப்பாற்றினர். உயிரினும் மேலான மானத்தை ஸ்ரீ M.S.J. தம்பதிகள் காப்பாற்றினர். எப்படி நன்றி நவில்வது இவர்களுக்கு என்பதுதான் தெரியவில்லை.

* * *

எனது குடும்பத்தில் பெரியதொரு துக்கம் நேர்ந்தது. அதனல் நான் தளர்ந்து விழுந்துவிடுவேனே என நான்மயங்கிய காலத்தில் என்னைத் தாங்கிக் கண்ணீரைத் துடைத்தனர் செட்டி நாட்டரசரின் காரியதரிசியான திரு. V. வைத்திய சுப்ரமணியம் தம்பதிகள்! இவர்கள் அந்நேரத்தில் என்னைக் காப்பாற்றியிரா விட்டால், எனது177வது பட்டாபிஷேகத்துடன் என் சேவை நின்றிருக்கும்! இந்தப் பரம உபகாரிகளை நான் எப்படி மறக்க முடியும்!

* * *

இராமனது விக்ரகத்தை என்னிடம் வந்து சேருமாறு அதற்குலட்சார்ச்சனை நிகழும்படியாக உபகாரம் செய்த கோவை ஸ்ரீ P, S. G. G. கோவிந்தசாமி நாயுடு அவர்களையும் அவர் தம் சகோதரி ஸ்ரீமதி வேலுமணி அம்மையாரையும் என்றும் நினைவு கூர்வேன்! என் தெய்வத்தையே என்னிடம் சேர்த்து வைத்த வர்களன்றோ இவர்கள்!

இன்னும் எனக்குப் பலவிதங்களிலும் உதவி புரிந்து வரும் திரு N. மகாலிங்கம், பொள்ளாச்சி! திரு. சுத்தானந்த பாரதியார் திரு G. D. C. MADRAS, (Easuns, Madras), போன்ற அன்பர் களின் உதவியை என்றும் மறக்கவே மாட்டேன். இன்னும் ஆயிரக்கணக்கான அன்பர்கள் எனக்கு உதவி செய்துள்ளனர். மிகமிக முக்கியமான சம்பவங்களை மேலே குறிப்பிட்டுள்ளேன். என் அன்பர்களின் (ஒருவர் கூட விடாமல்) அன்பை "நான் பெற்ற பேறு" என்ற புத்தகமாக வெளியிட வேண்டி எழுதிக் கொண்டிருக்கிறேன்.

கடைசியாக ஒரு விஷயம். உலகில் பெறற தாயைக் காட்டிலும் பெரிய தெய்வம் கிடையாது. எவரிடம் எதை மறைத் தாலும் பெற்ற தாயிடம் எக் காரியத்தையும் மறைக்கக்கூடாது என்ற கொள்கையை உடையவன் அடியேன். ஒரு அன்பர் மன்னிக்கத்தக்க தவறென்று இழைத்தார். குற்றம் செய்தவர் பேசும் தெய்வமாக விளங்கும் பெற்ற தாயிடம் உண்மையைக் கூறி அதைச் சரி செய்து விட வேண்டும். அப்படிச் செய்யும் பட்சத்தில் நானும் உதவுகிறேன் என்றேன். என் அன்பர் தான் செய்த தவறுகளை ஏற்றுத்திருந்தக் கிடைத்த சந்தர்ப்பங்களைப் பயன் படுத்திக் கொள்ளாது பெற்ற தாய் தந்தையருக்குத் துரோகம் இழைத்ததுடன், ஒரு குற்றமும் அறியாது அவரது நல்வாழ்வை வேண்டி நற்புத்திக் கூறிய என்னையே பிறர் எள்ளி நகையாடும் வண்ணம் துரோகம் செய்து விட்டார். வாழ்க்கையில் என் இதயம் தாங்கமுடியாது எனக்கு நல்லவர் என நான் எண்ணிய நண்பரால் ஏற்பட்ட பேரிடி இது. நேர்மை

எனக்கு மனச்சாந்தியளித்து விட்டது. என் நண்பரோ! மனச்சாட்சியை விற்று விட்டவருக்கு மனச் சாந்திபற்றிய கவலை கிடையாது போலும்' உலகத்தில் இறைவன் மக்களுக்குத் தாயும் தந்தையும் தெய்வம் என்பதையறிந்து நடக்க அருள்வானாக!

இவ்வாறு பல விதமான மனக் கலக்கங்களால் பீடிக்கப் பட்டு அலைகடல் துரும்பாக உலாவுகின்ற அடியேனுக்கு மனச் சாந்தியை அளித்தவை இறைவனது நாமமும் என் அருமைத் தமிழ் மொழியுமே ஆகும். ஆதலின் மேலும் இப்பணியைத் துடங்குகிறேன் எனது சொல், மனம், உடல் யாவற்றையும் இறைபணிக்கே அர்ப்பணம் செய்கிறேன் (சிவானந்தலஹரி 7ம் ஸ்லோகம்). இறைவன் குற்றம் நீக்கி எனையாட்கொள்ளவேணு மென்றும் அன்பர்கள் நல்லாதரவு காட்ட வேணுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். ஸ்ரீ ராமஜெயம். வெற்றிவேலுற்ற துணை.

வாக்கு உனது துதிகளிலும் வன்மனம் உன்பாதத்தும்
பூக்கரம் உன் பூசையிலும் புந்தியதுன் தியானத்தும்
நோக்குன்தன் வடிவத்தும் நுண்செவி உன் சரிதத்தும்
சேக்கையுற அருளுதியேல் தீயவை கற்று அவமாகேன்.

— சிவானந்தலகரி 7-வது ஸ்லோகம்

கல்லாப்பிழையும் கருதாப்பிழையும் கசிந்துருகி
நில்லாப்பிழையும் நினையாப்பிழையும் நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையும் துதியாப்பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே.

— பட்டினத்தடிகள்.

ஸ்ரீ கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்!



பங்கஜம் பிரிண்டர்ஸ், கணேஷ்நகர் 2ம் வீதி, புதுக்கோட்டை.

எமது அடுத்த வெளியீடு!

உ




ஸ்வாமியே சரணம் ஐயப்பா.

# கலியுக வரதன் ஸ்ரீ ஐயப்பன்





ஸ்ரீராமகதாநிலய வெளியீடு.

ஸ்வாமியே சரணம் ஐயப்பா







ஸ்ரீராம கதா ரத்ன V. தியாகராஜன் அவர்கள் மூன்றாவது முறையாக 108 ஸ்ரீ ராம பட்டாபிஷேகங்கள் செய்வதாக எடுத்துக் கொண்டுள்ள முயற்சி நன்கு நிறைவேற ஸ்ரீ வரத ராஜப் பெருமானின் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறோம்.

---

ஸ்ரீராமகதாரத்ன V. தியாகராஜன் அவர்களின் இரண்டாவது பிரதிக்கினை நன்கு நிறைவேறியது பற்றி எங்களது மகிழ்ச்சியுடன் கூடிய பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்வதுடன் மூன்றாவது பிரதிக்கினை சிறப்புடன் சீக்கிரம் நிறைவேற இறைவனை வணங்கி வாழ்த்துகிறோம்.

---



பங்கஜம் பிரிண்டர்ஸ், கணேஷ்நகர் 2ம் வீதி, புதுக்கோட்டை.